2 பக்கங்கள் 15 காசுகள்

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 மதுரை 20—12—75 சனி மலர் 269

பதிவு எண் எம்: 8798

## இஸ்ரேலுடன் நடந்த போரில் எகிப்துக்கு இழப்பு எவ்வளவு

கெய்ரோ, டிச. 18—

இஸ்ரேலுக்கும் எகிப்துக்கும் நடந்த யுத்தத்தில் மட்டும் எகிப்துக்கு 40 ஆயிரம் மில்லியன் டாலர்—அதாவது 32 ஆயிரம் கோடி ரூபாய் இழப்பு ஏற்பட்டுள்ளதாம். இத்தகவலை அரசாங்க சார்பான 'அல்-அஹ்ரம்' பத்திரிகை வெளியிட்டுள்ளது.

எகிப்துக்கு ஏற்பட்ட இழப்பை ஈடு செய்வது சம்பந்தமாக அரபு நாடுகள் மாநாடு ஒன்றைக் கூட்டவேண்டும் என்றும் அரபு லீக்கை அப்பத்திரிகை வற்புறுத்தியுள்ளது.

## அர்ஸ் அலறுகிருர் !

ஹுப்ளி, டிச, 18—

தம்மைக் கவிழ்க்க சிலர் முயற்சிக்கிருர்கள் என்று கர்நாடக முதலமைச்சர் தேவராஜ் அர்ஸ், ராணி பெரன்னூர் என்னுமிடத்தில் பேசும்போது தெரிவித்தார். ஆனலும் அவர்களது கவிழ்ப்பு முயற்சி வெற்றிபெறப்போவதில்லை என்றும் கூறிக்கொண்டார்.

அதே கூட்டத்தில் பேசிய பிரதேச இந்திரா காங்கிரஸ் தலைவர் கே. எச். பட்டீல், தனக்குத் தெரிந்தவரையில் முதலமைச்சரைக் கவிழ்க்கயாரும் முயற்சிக்கவில்லை என்று குறிப்பிட்டார்.

# நிரந்தர வேலை வாய்ப்புக்கு—தமிழகத்தில் முந்திரி கார்ப்பரேசன் அமைக்கவும்

## 400 பெண்கள் பிரதிநிதிகளாக பங்குகொண்ட முந்திரிப்பருப்பு தொழிலாளர் மாநாடு வலியுறுத்தல்

### பாக்டரி சட்டத்தை அமுலாக்கக் கோரிக்கை

குழித்துறை, டிச. 18—

முந்திரி பருப்புத் தொழிலாளர்களுக்கு பாக்டரி சட்டத்தை அமுல் படுத்த வேண்டும் என்றும், கேரளத்தில் இருப்பது போன்று தமிழகத்திலும் 'முந்திரிக் கார்ப்பரேசன்' ஒன்றை அமைத்து தொழிலாளர்களுக்கு நிரந்தர வேலை அளிக்க வேண்டும் என்றும் இங்கு நடந்த தமிழ் நாடு முந்திரிப் பருப்புத் தொழிலாளர்கள் மாநாடு தமிழக அரசை வற்புறுத்தியது.

கடுமையான சுரண்டலுக்கு மத்தியில் அடிமைப் படுத்தப்பட்டுக் கிடந்த குமரி மாவட்ட முந்திரிப் பருப்பு தொழிலாளர்கள் ஸ்தாபன ரீதியாக ஒன்று திரண்டு, தங்கள் கோரிக்கைகளைப் பெற போராடவும் தயார் என்பதை நிரூபிக்கும் வகையில் டிசம்பர் 14-ந் தேதி குழித்துறையில் முந்திரிப் பருப்புத் தொழிலாளர் மாநாடு சிறப்பாக நடைபெற்றது.

தோழர் ஜி எஸ் மணி கொடி ஏற்ற மாநாடு ஆரம்பமாயிற்று. தோழர் டி கொச்சுமணி வரவேற்புரை நிகழ்த்தினர்.

பொதுச் செயலாளர் தோழர் பி கோபிதாஸ் பாதுகாப்புச் சட்டப்படி சிறையில் இருப்பதால் உதவிச்செயலாளர் தோழர் பி சுந்தரம் அறிக்கை தாக்கல் செய்தார்.

அறிக்கை மீதான விவாதத்தில் தோழர்கள் பி கே கோமதி, சரசம்மை, லீலா, கமலா, ஜகதம்மை, விக்டோரியா, சுலோசனா பேபி ஆகியோர் கலந்து கொண்டனர்.

95 சதவீதம் பெண் தொழிலாளர்களைக் கொண்டது இந்த தொழில். வந்திருந்த 575 பிரதிநிதிகளில் 400 பேர் பெண் தொழிலாளர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

மாநாட்டை வாழ்த்தி தொழிற்சங்கத் தலைவர்கள் வி முத்துச்சாமி, பி பெருமாள், சரஸ்வதி, (மாதர்சங்கம்), எம் ஒ சுந்தர், கிருஷ்ணன், வின்சென்ட் ராஜ், கிருஷ்ணக்கோன், கே வேலாயுதம், மாதவன் ஆகியோர் பேசினர்.

#### பாப்பா உமாநாத்

மாநாட்டை வாழ்த்தி தமிழகஜனநாயக மாதர்சங்க செயலாளர் தோழர் பாப்பா உமாநாத் பேசியதாவது:

முந்திரிப்பருப்பு தொழிலாளர் வாழ்க்கையில் இது ஒரு முக்கியத்துவம் வாய்ந்த நாள். கோரிக்கைகளை அரசின் காதுகளுக்கு எட்டவைக்கும் மாநாடு இது. இந்த மாநாட்டில்எடுக்கும் முடிவுகளை அமுல் படுத்த நீங்கள் கடுமையாக பணியாற்ற வேண்டும். இன்றைய அரசியல் நிலை உங்களுக்குத் தெரியுமே.

இந்த வேலைசெய்வதால் உங்கள் கைகள் குஷ்டரோகி கைகள் போல்ஆகி விடுகிறது. இதையெல்லாம் தாங்கிக் கொண்டு சுரண்டலுக்கு மத்தியில்உழைக்கின்றோம். ஆனல் அதன் பலன் நமக்கு கிட்டவில்லை, இந்நிலையில் இந்திய அரசின் இன்றைய நடவடிக்கைகள் நமக்கு ஏதாவது பயனைத் தந்ததா? விலைவாசி இறங்கி விட்டதா? சம்பளம் உயர்ந்ததா? இல்லவே இல்லை. எத்தனையோ குடும்பங்கள் பட்டினியால் சாவதைத்தானே காணமுடிகின்றது.

இந்நிலைமையில் நாம் நமது செங்கொடிஸ்தாபனத்தின் கீழ் ஒற்றுமையுடன் அணி திரண்டால் மட்டுமே விமோசனம் கிடைக்கும்.

#### வி பி சிந்தன்

மாநாட்டை வாழ்த்தி தமிழ்நாடு சிஐடியூ உதவித் தலைவர் தோழர் வி பி சிந்தன் பேசியதாவது:—

நமது கோரிக்கைகள் நிறைவேற வேண்டுமானல், நமது ஸ்தாபனம் பலப்பட வேண்டும். அதற்காக நாம் எந்தத் தியாகத்துக்கும் தயாராக இருக்கவேண்டும். கேரளத்திலிருந்து வரும் கச்சா முந்திரியை நம்பித்தான் தமிழ்நாட்டில் முந்திரிப் பருப்பு தொழில் நடக்க வேண்டியுள்ளது.

இந்நிலைமாற தமிழ்நாட்டில் ஒரு முந்திரி கார்ப்பரேசன் அமைக்கப்பட வேண்டும். கேரள முந்திரிப் பருப்பு தொழிலாளர்கள் இவ்வளவு சலுகைகளை அனுபவிக்கின்றனர்கள் என்றல் அதற்குக் காரணம் அவர்கள் ஸ்தாபன ரீதியாக திரண்டு நடத்திய கடுமையான போராட்டங்கள் தான். அவை நமக்கு பாடமாக அமையட்டும்.

#### சங்கச்செயலாளரை விடுதலை செய்க

முந்திரிப்பருப்பு தொழிலாளர்களுக்கு பிரசவகால சம்பளம், இ எஸ் ஐ பிராவிடண்ட் பண்ட் வசதி உட்பட்ட உரிமைகள் கிடைக்க பாக்டரி ஆக்ட் அமுல்படுத்தப்படவேண்டும் — கச்சா முந்திரி கிடைக்காததால் தொழிற்சாலைகள் அடிக்கடி மூடப்படும் நிலைமாற தமிழக அரசு தமிழ்நாடு முந்திரி கார்ப்பரேஷன் அமைத்து கச்சாமுந்திரி கோட்டா பெற்று ஆலைகளுக்கு வினியோகிக்க வேண்டும்-கைது செய்துசிறையில் அடைக்கப்பட்டுள்ள சங்கபொதுச் செயலாளர் கோபி தாசை விடுதலை செய்ய வேண்டும் போன்ற தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன, மற்றும் தொழில் தகராறுகளில் போலீசின் பாரபட்ச தலையீட்டைக் கண்டித்தும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

#### பொதுக்கூட்டம்

மாலை மார்த்தாண்டம் காந்திமைதானத்தில்தோழர் ஜி எஸ் மணி தலைமையில் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சமீப காலத்தில் இப்படி ஒரு பொதுக் கூட்டம் இந்தப்பகுதியில் நடைபெற்றதில்லை.

பொதுக்கூட்டத்தில் தோழர்கள் இ எம் எஸ் நம்பூதிரிபாட், வி பி சிந்தன் பாப்பாஉமாநாத், ஜே ஹேமசந்திரன், பி திவாகரன், ஆர் மாதவன், ஏ எஸ்கிருஷ்ணன்குட்டி ஆகியோர் முந்திரி பருப்பு தொழிலாளர் பிரச்னைகள், இன்றைய அரசியல்நிலைமை இவற்றை விளக்கிச் சொற்பொழிவாற்றினர்.

பல்வேறு வெகுஜன இயக்கங்கள் சார்பில் தோழர் இ எம் எஸ் அவர்களுக்கு மாலைகள் சூட்டப்பட்டன.

பொதுக்கூட்ட முடிவில் மதுரை குமார் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

## "அங்கோலாவில் தலையிடாதே!"

### அமெரிக்க ஜனதிபதி போர்டுக்கு செனட் துணைக் குழு தடை

வாசிங்டன், டிச. 18—

அங்கோலாவில் எம் பி எல் ஏ ஸ்தாபனத்துக்கு எதிரான இரு கோஷ்டிகளுக்கு (எப் என் எல் ஏ, யூனிட்டா ஆகிய இரு ஸ்தாபனங்கள்) மறைமுகமாக இராணுவ உதவியும் பண உதவியும் அளிக்க வேண்டும் என்று அமெரிக்க ஜனதிபதி கோரியதை அமெரிக்க செனட் சபையின் வெளி உறவு துணைக்கமிட்டி நிராகரித்தது.

சடந்த 16ந் தேதி நடந்த இக்கமிட்டிக் கூட்டத்தில் ஜனதிபதி போர்டின் கோரிக்கைக்கு எதிராக லோவா மாநிலத்தைச் சேர்ந்த ஜனநாயகக் கட்சி செனட்டர் கிளார்க் டிக் கொண்டு வந்த தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

இக்கமிட்டியின் தலைவர் ஹூபர்ட் ஹம்ப்ரே ஆவார்.

#### நிதி ஒதுக்கீடுமசோதாவுக்கு திருத்தம்

11,230 கோடி டாலருக்கான அமெரிக்க தற்காப்பு நிதி ஒதுக்கீடு மசோதாவுக்கு ஒரு திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அங்கோலாவில் உளவு தகவல்களைச் சேகரிப்பதற்குத்தவிர மற்றபடி எந்த வேலைகளுக்கும் அமெரிக்க இராணுவத்தலைமை அல்லது சி ஐ ஏ யின் பணத்தைப் பயன்படுத்துவதைத் தடை செய்யக்கோருவதே அத் திருத்தம். அத் திருத்தம் கொண்டு வருவதை செனட் சபையின் இரகசிய விவாதத்தில் முன்வைக்கப் போவதாக ஹம்ப்ரே கூறியுள்ளார்.

#### ஒரே மாதிரி அல்லவாம்

அங்கோலாவுக்கு அமெரிக்கா ஆயுத உதவியளிப்பதும், வியட்நாமில் ஆரம்பகாலத்தில் அமெரிக்கா ஈடுபாடு கொண்டதும் ஒரே மாதிரியானது அல்ல என்று ஜனதிபதி மாளிகை அதிகாரி ஒருவர் கூறியுள்ளார்.

## பஞ்சாலை தொழிற்சங்கங்களின் கவனத்திற்கு

தோழர்களே,

பஞ்சாலைத் தொழிலாளர்களின் சம்பளத்தை குறைக்கவேண்டும் என்று தென்னிந்திய மில் முதலாளிகள் சங்கம் கோரிக்கை வைத்துள்ளதையும், அதை எதிர்க்க கோவை மாவட்ட அனைத்து சங்க நடவடிக்கை குழு அமைக்கப்பட்டுள்ளதையும் அறிந்திருப்பீர்கள்.

இப்பிரச்சினையை பரிசீலித்து மாநில அளவில் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள மாநில பஞ்சாலைத் தொழிற் சங்கப் பிரதிநிதிகளின் கூட்டமொன்றை டிசம்பர் 30 அன்று கோவையில், மேற்படி அனைத்து சங்கக் குழு கூட்டியுள்ளது. தொழிற்சங்க மத்திய அமைப்புக்களின் மாநிலக்குழுக்களுக்கு மேற்படி அனைத்து சங்கக்குழுவின் கன்வீனர் இதுபற்றி கடிதம் எழுதியுள்ளார். நம் சி ஐ டி யூ மாநிலக் குழுவிற்கும் கடிதம் வந்துள்ளது.

சி ஐ டி யூ வுடன் இணைந்துள்ள எல்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கங்களும் குறைந்த பட்சம் ஒவ்வொரு பிரதிநிதியை மேற்படி கூட்டத்துக்கு தவருமல் அனுப்பிவைக்க வேண்டுகிறேன். அந்தந்தப்பகுதியிலுள்ள இதர சங்கங்களின் பிரதிநிதிகளையும் அணுகி தகவல்சொல்லி, அழைத்துவர முயற்சியுங்கள்.

தோழமையுள்ள

ஏ. நல்லசிவன்

செயலாளர்

மதுரை
18—12—75

— சி ஐ டி யூ தமிழ் மாநிலக்குழு

## திண்டுக்கல் நகரசபை தலைவர்மீது நம்பிக்கையில்லா தீர்மானம் நிறைவேறியது

திண்டுக்கல், டிச. 18—

கடந்த 16ந் தேதி நடந்த திண்டுக்கல் நகரசபையின் விசேஷக் கூட்டத்தில் அதன் தலைவர் திரு பொன் சீனிவாசன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறியது. இக்கூட்டம் உதவிக் கலெக்டர் திருமதி சாந்தா ஷீலா நாயர் தலைமையில் நடந்தது.

தலைவர் உட்பட சபையின் மொத்த உறுப்பினர்கள் 31 பேரில் இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்கள் இருவர் கூட்டத்துக்கு வரவில்லை. கூட்டத்துக்கு வந்திருந்தவர்களில் 27 பேர் தீர்மானத்திற்கு ஆதரவளித்தனர். ஒரே அதிமுக உறுப்பினர் நடுநிலைமை வகித்தார். தீர்மானத்துக்கு பொன் சீனிவாசனைத் தவிர வேறு யாரும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை.

தீர்மானம் நிறைவேறியது தெரிந்ததும் சபைக்கு வெளியே பட்டாசுகளும், அதிர் வெடிகளும் போடப்பட்டன.

பொன் சீனிவாசன் 1970ல் நடந்த தேர்தலில் திமுக உறுப்பினராகப் போட்டியிட்டு வெற்றி பெற்று நகரசபை தலைவரும் ஆனர். பின்னர் அவர் அக்கட்சியிலிருந்து தற்காலிக நீக்கம் செய்யப்பட்டார்.

## போப்பின் கம்யூனிஸ்ட் எதிர்ப்பு

வாடிகன், டிச. 18—

இத்தாலி நாட்டின் தேர்தலிலே கம்யூனிஸ்ட் கட்சி முதற்பெரும் கட்சியாகத் தோந்தெடுக்கப் பட்டிருக்கிறது. முக்கியமான மாநகராட்சிகளெல்லாம் கம்யூனிஸ்ட் வசம் வந்துவிட்டன.

அதனல் ஆத்திரம் கொண்ட நிலப்பிரபுக்களும் முதலாளிகளும், மதபீடங்களும், கம்யூனிஸ்டுகளுக்கு வாக்களித்த மக்களைப்பழி வாங்க முற்பட்டிருக்கிருர்கள்.

மார்க்சிஸ்டுகளாக இருப்பவர்களையும் மார்க்சிஸ்டுகளுக்கு ஆதரவு அளித்தவர்களையும் கிருஸ்துவர்கள் அல்ல என்று மதப்பிரஷ்டம் செய்து பழிவாங்குகிருர்கள். 1949-ம் ஆண்டில் மதப்பிரஷ்டம் செய்யும் பைத்தியம் பிடித்தது இப்போது மீண்டும் பிடித்திருக்கிறது.

மக்களின் ஆதரவு கம்யூனிஸ்ட்கள் பக்கம் பெரிய அளவில் திரும்புகிறபோதெல்லாம், கம்யூனிஸ்ட் எதிர்ப்பாளர்களுக்கு இந்தப் பைத்தியம் பிடிப்பது சகஜம்.

## 13,746 கோடி கடன் மத்திய அரசிடம் மாநில அரசுகள் பட்டுள்ளன

புதுடில்லி, டிச. 18—

இந்தியசர்க்கார் வெளி நாடுகளில் ரூ 10,000 கோடிக்கு மேல் கடன் பட்டிருப்பது ஒருபுறமிருக்க, இந்திய சர்க்காருக்கு மாநில அரசுகள் ரூ 13,746 கோடி கடன் பட்டிருக்கின்றன என்ற தகவலை ரிசர்வ் பேங்க் தந்துள்ளது.

இத்தகவலை ரிசர்வ் பாங்கியின் ஆய்வுக் குறிப்பு ஒன்று கூறுகிறது.

1976 மார்ச் முடிவில் மேலும் 1028 கோடி ரூபாய் அதிகமாகி மொத்தக்கடன் 14 ஆயிரத்து 774 கோடி ரூபாயாக உயர்ந்துவிடும் என்றும் அக்குறிப்பு கூறுகிறது.

இந்தக் கடனுக்காக மாநில அரசுகள் செலுத்த வேண்டிய வட்டி மட்டும் 698 கோடிரூபாயாகும்.

### இது மாதர் ஆண்டு

## சென்னையில் குளிர் தாங்காது பெண் சாவு

சென்னை, டிச. 19—

சென்னை தாம்பரம் அருகே, கடந்த 17ந்தேதியன்று, கடுங்குளிர் தாங்காது நடைபாதையில் ஒரு பெண் இறந்து கிடந்தார்.

சர்வதேச மாதர் ஆண்டு கொண்டாடப்படும் இச் சமயத்தில் குளிர் தடுப்பு சாதனமோ, ஒண்டுவதற்கு குடிசையோ, குளிரைத் தாங்கும் அளவுக்கு உடுப்புகளோ இல்லாமல் அந்த 65வயதுமாது விறைத்துபிணமாகக் கிடந்தார்.

## இஸ்ரேலின் மாஜி பிரதமர் ஓலம்

பெவர்லி ஹில்ஸ், (கலிபோர்னியா), டிச. 31—

ஐ. நா. ஸ்தாபனம் பயனில்லாமற்போனதுஎன்றும், பழைய "லீக் ஆப் நேசன்ஸ்"க்கு ஏற்பட்ட கதியே ஐ நா வுக்கும் ஏற்படப்போகிறது என்றும் இஸ்ரேல் நாட்டுமுன்னுள் பிரதமர் திருமதி கோல்டா மெயர் கடந்த15ந்தேதிஇங்கு செய்தியாளர்களிடம் கூறியுள்ளார்.

ஐ நா. வில் பேசுவதற்காக பாலஸ்தீன விடுதலை ஸ்தாபனத்தின் தலைவர் அராபட் அழைக்கப்பட்டதைச் சுட்டிக்காட்டிபேதிருமதி மெயர்மேற்கண்டவாறு குறிப்பிட்டார்.

## 786-வது துணைக் கோள் சோவியத் ஏவியது

மாஸ்கோ, டிச. 18—

அண்டவெளி ஆராய்ச்சிக்காக, இதுவரை 786 துணைக் கோள்களை அண்டவெளிக்கு சோவியத் நாடு அனுப்பி ஆராய்ச்சி செய்து வருவதாக டாஸ் செய்தி நிறுவனம் அறிவித்துள்ளது.

## சீனம் ஏவியது 3-வது துணைக் கோள்

பீகிங், டிச. 18—

கடந்த 6 மாதங்களுக்குள்ளாக 3 துணைக்கோள்களை சீனம் ஏவியுள்ளது. அந்த மூன்று துணைக்கோள்களும் பூமியை வெற்றிகரமாகச் சுற்றிக் கொண்டிருகின்றன என்று பீகிங் வானெலி அறிவித்தது.

## ஸ்பெயின் அரசியல் கைதிகள் விடுதலை

மாட்ரிட், டிச. 19—

பாசிஸ்ட் சர்வாதிகாரியான ஜெனரல் பிராங்கோ செத்துப்போன பிறகு ஜுவான் கிரோஸ் மன்னர் பதவி ஏற்ருர்.

ஜனநாயக சீர்திருத்தங்கள் கோரி நாடு முழுதும் கிளர்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

இக்கிளர்ச்சிகளின்காரணமாக பொது மன்னிப்பு விட்டு ஸ்பெயின் நாட்டிலுள்ள அரசியல் கைதிகளில் மூன்றிலொரு பகுதியினரை விடுதலை செய்ய உத்தரவிட்டார். இதன்படி 5355 பேர் விடுதலை ஆவார்கள்.

## கக்கன் தம்பி ஸ்தாபன காங்கிரசில்

மதுரை, டிச. 18—

இந்திரா காங்கிரசுடன் இணையவேண்டும் என்று துடிக்கின்ற முன்னுள் அமைச்சரும், முன்னுள் தமிழ் நாடு ஸ்தாபன காங். கமிட்டித்தலைவருமான, பி. கக்கனின் தம்பி திரு பி. வடிவேலு ஸ்தாபனக் காங்கிரசில் உள்ளார். இரு காங்கிரஸ் இணைப்பை கடுமையாக எதிர்க்கும் இவர் ஓர் அறிக்கையில்திரு கக்கனுக்குநடத்தப்பட்ட மணிவிழாவைக் கெடுக்க வேண்டும என்பதற்காக சிலர் பல வழிகளை மேற்கொண்டார்கள் என்றும் அவர்கள் இப்போது இணைப்பு ஆதரவாளர்களாக உள்ளார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஸ்தாபனக் காங்கிரசின் தாழ்த்தப்பட்டோர் பிரிவின் மதுரை மாவட்ட அமைப்பாளராக திரு. வடிவேலு தற்போது நியமிக்கப்பட்டுள்ளார்.

## ஆஸ்திரேலியா தேர்தல் கன்சர்வேடிங் கூட்டணி வெற்றி

சிட்னி, டிச. 18—

ஆஸ்திரேலியாவில் கடந்த சனிக்கிழமை நடந்த தேர்தலில், வலதுசாரி கட்சியான கன்சர்வேடிங் கட்சியின் தலைமையிலான கூட்டணி 93 இடங்களைக் கைப்பற்றி வெற்றி பெற்றது. இக்கூட்டணியில் மிதவாதிகள் (லிபரல்) கட்சியும், தேசிய கட்சியும் உள்ளன. ஏற்கனவே பதவியிலிருந்த தொழிற் கட்சி 31 இடங்களை தான் பெற்றது.

கன்சர்வேடிவ் கட்சியின் தலைவர் மால்கம் பிரேசர் பிரதமரானர்.

கடந்த பார்லிமெண்டில் தொழிற்கட்சிக்கு 65 இடங்களும், எதிர்க்கட்சிகளின் கூட்டணிக்கு 61 இடங்களும் சுயேட்சை உறுப்பினர் ஒருவரும் இருந்தனர்.

## யார் பாசிஸ்ட்? இ. எம். எஸ். பேட்டி

மார்த்தாண்டம், டிச. 19—

கடந்த 14-ந் தேதி முந்திரிப் பருப்புத் தொழிலாளர் மாநாட்டையொட்டி இங்கு நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர் இ எம் எஸ் பேசிய பின், அவரை செய்தியாளர்கள் பேட்டி கண்டனர்.

கேள்வி :

பாட்னவில்நடைபெற்ற பாசிச எதிர்ப்பு மாநாட்டில் "கருணநிதி ஒரு பாசிஸ்ட்" என்று சொல்லப்பட்டது பற்றி தங்கள் கருத்து?

#### இ எம் எஸ் பதில்

தமிழ்நாட்டில் ஆளும் கட்சி சார்பிலும், மாற்றுக் கட்சிகள் சார்பிலும் இரு பாசிசஒழிப்புமாநாடுகள் நடந்தன ஆனல் பாட்னவும் கேரளமும் உட்பட மற்ற பகுதிகளில் ஆளும் கட்சிகளுக்கு மட்டுமே பாசிச எதிர்ப்பு மாநாடுநடத்த முடிந்தது. இதிலிருந்து யார் பாசிஸ்ட் என்பது தெரியாதா?

கேள்வி :

தமிழகத்தில் அடுத்த பொதுத்தேர்தலில் பி, ராமச்சந்திரன் தலைமையிலான ஸ்தாபன காங்கிரஸ், திமுக, மார்க்சிஸ்ட் கூட்டணி ஏற்படும் என்று பேசப்படுகிறதே?

பதில்:—

தேர்தல் நடக்குமா என்பதே சந்தேகமாக இருக்கும் சூழ்நிலையில் அதைப்பற்றியெல்லாம்இப்போதுஎண்ண வேண்டிய நிலையில் நாங்கள் இல்லை,

கேள்வி :

திருவனந்தபுரம் மாநகராட்சி கலைப்பு பற்றி தங்கள் கருத்து?

பதில்:—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மேயர் ஆட்சி நடந்ததால், அவசரச்சட்டம் உபயோகித்து ஜனநாயக கோட்பாடுகளை காற்றில் பறக்கவிட்ட ஒரு சம்பவம்.

## சுகார்தோவின் படைகளுக்கு டிமோரில் கடும் எதிர்ப்பு

டார்வின், [ஆஸ்திரேலியா] டிச. 18—

சுதந்திர டிமோர் தீவு மீது இந்தோனேசிய ஆக்ரமிப்பாளர்கள் படையெடுத்துச் சென்று, தலைநகரான டிலியைக் கைப்பற்றிக் கொண்டனர்.

சுதந்திரப் பிரகடனம் செய்த பிரட்லின் கட்சியின் துருப்புகளை வேட்டையாட, இந்தோனேசிய பாசிஸ்ட் சுகார்த்தோ சர்க்கார் பெரும் படைகளை அனுப்பி வைத்தது.

பிரட்லின் சிப்பாய்களையெல்லாம் அழித்துவிட்டதாகவும் யாதொரு எதிர்ப்பும் இப்போது இல்லையென்றும் சென்றமாதம் இந்தோனேசிய சர்க்கார் அறிவித்தது.

ஆனல் சுதந்திரத்தை நேசிக்கும் பிரட்லின் துருப்புகள் தலைநகர் டிலிக்குள்ளும் பாவுக்கா நகரிலிருந்தும், இந்தோனேசியத் துருப்புகளைக் கடுமையாக எதிர்த்துப் போராடிக் கொண்டிருப்பதாக பிரட்லின் வானெலி கூறியது.

பாவுக்கா நகரையடுத்துள்ள கிராமங்களில் இந்தோனேசிய சிப்பாய்களை, பிரட்லின் சிப்பாய்கள் வளைத்துக் கொண்டு நொறுக்குவதாகவும் செய்தி கிடைத்திருக்கிறது. மொத்தம் 5000 இந்தோனேசிய சிப்பாய்கள் கொல்லப்பட்டதாக, கைதுசெய்யப்பட்ட இந்தோனேசிய சிப்பாய்கள் கூறியதாகவும் தகவல் கிடைத்துள்ளது.

# தீக்கதிர்

## இந்திய—பிரஞ்சு கூட்டுச் சுரண்டல்

இந்திய மக்களின் வாங்கும் சக்தி மிகப் பெரிய அளவில் சுருங்கிவிட்டதின் விளைவாக, இந்தியாவில் உற்பத்தியான ஆலைப் பொருள்கள் விற்பனையின்றி மலைபோல தேக்கமடைந்து கிடக்கின்றன. வர்த்தக மந்தத்தைத்தொடர்ந்து உற்பத்தியை வெட்டவும் தொழிற்சாலைகளை மூடவும்படியானநிலைமை துரிதமாக உருவாகிக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு உள்நாட்டில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டவே. இந்திய முதலாளிகளும் அவர்களது ஆட்சியாளர்களும் வெளிநாட்டு மார்க்கெட்டுகளைத் தேட அலைகிருர்கள். வெளிநாட்டு முதலாளிகளுடன் கூட்டுச் சேர்ந்து இந்தியாவிலேயே தொழில்களைத் துவக்கி அயல்நாட்டு வர்த்தகத்தைப் பெருக்கவும்— ஆசிய, ஆப்பிரிக்க, லத்தின் அமெரிக்க நாடுகளில் அயல்நாட்டு முதலாளிகளுடன்சேர்ந்து—குறிப்பாக அமெரிக்க முதலாளிகளுடன் சேர்ந்து கூட்டாக முதலீடு செய்து தொழில்களை நிறுவவும் திட்டம் தீட்டிவருகிருர்கள்.

சென்றவாரம் இந்தியாவிலுள்ள இந்திய முதலாளிகளும், இந்தியாவிலுள்ள அமெரிக்க முதலாளிகளின் பிரதிநிதிகளும் ஒரு தூதுக்குழுவாக அமெரிக்காவுக்குச் சென்று. அங்குள்ள பெருமுதலாளிகளிடம், "இந்தியாவில் பிரதமர் இந்திராகாந்தி கையில் சகல அதிகாரங்களும் குவிந்திருப்பதினலும், வேலைநிறுத்தங்கள் கூடாதுஎன்று தடைசெய்திருப்பதினலும், அன்னிய மூலதனத்துக்கு வேண்டியமட்டும் லாபம் கிடைக்குமென்பதினலும், தேசவுடமை இல்லையென்றும் பிரதமர் அறிவித்திருப்பதினலும் இந்தியாவில் முதலீடு செய்ய பொன்னுன தருணம்வந்திருக்கிறது"என்றுகூறிநாக்கில் ஜலம் ஊற செய்திருக்கிருர்கள்.

இந்தவாரம் பிரஞ்சு தேசத்து முதலாளிகளுடன் கூட்டுச்சேரவும், வர்த்தகம் புரியவும் இந்திய சர்க்கார் பேச்சு வார்த்தை நடத்தி வருகிறது. பிரஞ்சு அயல் வர்த்தக மந்திரி நார்பட் சேகார்டு பிரதமர் இந்திராகாந்தியுடன்நீண்டநேரம் பேசியுள்ளார். அடுத்த ஜனவரிகடைசிவாரத்தில் பிரஞ்சு பிரதமர் ஜேக்கஸ் சிராக் புதுடில்லிக்கு வரவிருக்கிருர். பிறகு பிப்ரவரி மாதம்முதல் உடன்பாடு அமுலாகுமாம். இதற்காக இந்திய—பிரஞ்சு கமிஷன் என்று ஓர் அமைப்பு ஏற்படுமாம்.

பிரான்சுடன் செய்யவிருக்கும் உடன்பாட்டின்படி இருநாடுகளும், கூட்டாக மூலதனம் போட்டு, அரபுநாடுகளில் தொழில்களைத் துவக்குவார்களாம். மற்றும்பலநடுநிலைமைநாடுகளில் தொழில்களைத் துவக்குவதுபற்றியும்திட்டங்கள் தீட்டியுள்ளனராம்.

பிரஞ்சு மந்திரி சேகார்டு இந்தியாவைத்தூக்கிவைத்துப் பேசுவதில் தனி அக்கறை எடுத்துக்கொண்டுள்ளார். மூன்ருவது உலகநாடுகளில் இந்தியா ஒரு முக்கியமான நாடு என்ற முறையில் ஆசியாவில் அதற்கு பெருமை இருப்பதுபோல, இப்பொழுது ஐரோப்பாவிலும் இந்தியாவுக்கு பெருமை ஏற்பட்டிருப்பதாக உயர்த்தினர். நடுநிலைமை நாடுகளில் இந்தியாவுடன் சேர்ந்து கூட்டுத்தொழில்களைத்துவக்குவதற்கான தோதுக்களை ஆராய ஒரு தூதுக்குழுவை அனுப்பிவைக்க பிரஞ்சு சர்க்கார் தீர்மானித்திருக்கிறது.

ஜனவரி மாதத்தில் இந்தியா—பிரஞ்சு பிரதமர்கள் செய்யவிருக்கும் கூட்டு உடன்பாட்டில்—மின்சாரம், டெலிவிஷன் மூலமாக தகவல் போக்குவரத்து, ரசாயனப் பொருட்கள், கம்ப்யூட்டர்கள் அணுசக்தி ஆகியன இடம் பெறுமாம். இந்தியக் கடல்களினடியில் பெட்ரோல் ஊற்றுகளும், எரிவாயுவும் ஏராளமாக இருப்பதாகவும், அவற்றை எடுப்பதில் பிரான்சுக்கு நல்ல அனுபவம் இருப்பதாகவும் பிரஞ்சு மந்திரி கூறினர். மற்றும் கதிரவன் வெப்பத்திலிருந்தும் கடல் அலையிலிருந்தும் மின்சக்தியை உற்பத்தி செய்ய இருநாடுகளும் ஈடுபடலாமென்றும் கூறியுள்ளார்.

இந்தியத் தரப்பில் வெளிநாட்டு வர்த்தகம் பற்றி அதிக சவனம் செலுத்தினராம். இந்தியாவிலிருந்து இரும்புத்தாது. சர்க்கரை, ரயில்வே சாமான்கள். இன்ஜினியரிங் கருவிகள், முதலியன ஏற்றுமதி செய்ய முடியுமென்றும். இந்தியத் புகையிலைக்கும், சணலுக்கும் ஐரோப்பிய பொதுச் சந்தையில் இறக்குமதி சலுகைகள் அளிக்கச் செய்ய வேண்டுமென்றும் இந்தியத்தரப்பில் கூறப்பட்டிருக்கிறது, இக்கோரிக்கைகளை கவனிப்பதாக பிரஞ்சுத் தரப்பில் கூறப்பட்டது.

மற்றும் கர்நாடகத்திலுள்ள குட்ரேமுக் இரும்புக் கனிகளில் வெட்டி எடுக்கப்படும் இரும்புத்தாதுவையும் மற்றும் இரும்பையும் பிரான்சுக்கு அனுப்புவது என்றும் இந்தியாவிலுள் நிலக்கரியை எடுக்க பிரான்ஸ் உதவி புரியும் என்றும் இருதரப்பிலும் ஒப்புக் கொள்ளப்பட்டிருகிறது.

பிரான்ஸ், பயணிகள் விமானங்களை இந்தியாவுக்கு சப்ளை செய்யுமென்றும் — டிரக்குகளையும் லாரிகளையும் இந்தியாவுக்கே வந்து உற்பத்தி செய்து கொடுக்கவும், இந்தியாவில் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள எண்ணெய்க்கிணறுகளை அபிவிருத்தி செய்து கொடுக்கவும் பிரஞ்சு கம்பெனிகள் ஆர்வம் கொண்டிருப்பதாகவும் கூறப்பட்டது. சீக்கிரமே இவைபற்றி உடன்பாடுகள் ஏற்பட்டுவிடும்.

ஏற்கெனவே, அமெரிக்கா, பிரிட்டன், மேற்கு ஜெர்மனி, இததாலி, ஜப்பான், ஹாலந்து, சுவீடன், பெல்ஜியம் முதலான நாடுகளுடன் ஒததுழைப்பு உடன்பாடுகள் உள்ளன. அரபு நாடுகளில் இந்தியா பணஉதவியும்செய்கிறது. அமெரிக்க ஆதிக்கத்தில் உள்ள தென் கொரியாவுடனும் தொழில் உறவு ஏற்பட்டிருக்கிறது.

ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா, லத்தீன், அமெரிக்கா ஆகிய கண்டங்களில அயல் நாட்டுப் பெருமுதலாளிகளுடன் சேர்ந்து கூட்டுக்கம்பெனிகளை நிறுவ இந்திய முதலாளிகளும் இந்திய அரசும் முனைப்புக் காட்டி வருகிருர்கள்,

இது சோசலிஸ்ட் பாதை அல்ல. முதலாளித்துவ வளர்ச்சிப்பாதையே!

போட்டியிலும் நெருக்கடியிலும் மாட்டியுள்ள உலக முதலாளித்துவம், இந்தியாவையும் அதில் இழுத்து விடுகிறது.

நடுநிலைநாடுகளின் செல்வாதாரங்களைச் சுரண்டுவதற்கு, ஏகாதிபத்திய முதலாளிகளுடன்கூட்டுச் சேர்ந்து செல்கின்றபோது, அந்த நாடுகளில் ஏகாதிபத்ய நாடுகளுக்கு ஏற்படும் எதிர்ப்பும் கெட்டபெயரும் இந்தியாவுக்கு ஏற்படவே செய்யும். ஆனால், ஆசை வெட்கம் அறியாதே!

## கொள்ளை லாபம் குவித்த போது அள்ளியா கொடுத்தீர்கள்?

### தொழிலாளர் சம்பளத்தைக் குறைக்கக் கோரும் தமிழக பஞ்சாலை முதலாளிகளுக்கு தொழிற்சங்க தலைவர்கள் கேள்வி

கோவை, டிச.18—

தமிழக பஞ்சாலைகளுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியை சமாளிப்பதற்காக பஞ்சாலை தொழிலாளர்கள் சம்பளத்தைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்று தமிழ்நாடு பஞ்சாலை அதிபர்கள் விடுத்துள்ள கோரிக்கைக்கு ஏ ஐ டி யூ சி, தி மு க தொழிற் சங்கங்களும், கடும் கண்டனம் தெரிவித்துள்ளன.

வலது கம்யூனிஸ்ட் கட்சி சார்பான ஏ ஐ டி யூ சி சங்கத் தலைவர்கள் ஏ எம் கோபு, கே டி கே தங்கமணி, கே எம் சுந்தரம், பி கே ராமசாமி ஆகியோர் கூட்டறிக்கை விடுத்துள்ளனர்.

பஞ்சாலைத் தொழில்நஷ்டத்துக்கு அதிக அளவுசம்பளம், தரப்படுவது ஒரு காரணம் என்று முதலாளிகள் கூறுவது ஆச்சரியத்தை அளிக்கிறது என்று குறிப்பிட்டுள்ளனர். மேலும் கூறியிருப்பதாவது:—

பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு பம்பாய், அகமதாபாத் ஆகிய இடங்களில் அளிக்கப்படும் சம்பளம் தமிழகத்திலும் தரவேண்டும் என்ற கோரிக்கையை பஞ்சாலை முதலாளிகள் ஒரு போதும் ஏற்றுக் கொண்டதில்லை.

பஞ்சாலைத் தொழிலாளர்களின சம்பளம் கோவையில் குறைவாகவும், பம்பாயில் கூடுதலாகவும் இருந்த போது, ஒரே மாதிரியான சம்பளவிகிதம் வேண்டும் என்று தொழிலாளர்கள் முன்வைத்த கோரிக்கையை ஏற்க முதலாளிகள் மறுத்துவிட்டனர். தவிர, வாழ்க்கைச் செலவு, வேலைப்பளு போன்றவற்றையெல்லாம் கவனத்தில் கொள்ளாது பம்பாய், அகமதாபாத் சம்பள விகிதங்களை ஒப்பிடுவது பொருளற்றது.

ஏற்கனவே, மத்திய அரசாங்கம் தனது போனஸ் குறைப்புச்சட்டத்தின் மூலம் ஒவ்வொரு தொழிலாளியிடமிருந்தும் ஆண்டுக்கு ரூ. 250 வரை எடுத்து முதலாளிகளிடம் கொடுத்துள்ளது.

தென்னிந்திய பஞ்சாலைகளில் கடந்த இரண்டு ஆண்டுகாலமாக விலைவாசி புள்ளி விகிதத்துக்கு ஏற்ப பஞ்சப்படி மாற்றப்படவே இல்லை, கடைசியாக பஞ்சப்படி நிச்சயிக்கப்பட்டது 1974ல்தான். இதுவல்லாமின்றி, பஞ்சாலை முதலாளிகள் பெரும் லாபம் குவித்துள்ளனர். எனவேபஞ்சாலை தொழில் நெருக்கடிக்கு சம்பளமும், பஞ்சப்படியும் காரணம் அல்ல என்பது வெள்ளிடைமலை.

ஏற்கனவே செய்து கொண்டுள்ள ஒப்பந்தப்படி பஞ்சாலைமுதலாளிகள் ஜன. 1ந் தேதிமுதல் புள்ளிக்கு 30காசு பஞ்சப்படி தரவேண்டியுள்ளது. இப்போது பஞ்சாலை முதலாளிகள் எழுப்புஓலம், அந்தப் பஞ்சப்படி உயர்வை மறுப்பதற்குத் தான் என்று தோன்றுகிறது.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

### தி மு க பேரவை கடும் எதிர்ப்பு

மதுரை, டிச. 18—

பஞ்சாலைத் தொழிலாளர் சம்பளத்தை வெட்ட வேண்டும் என்ற கோரிக்கைக்கு தி மு க தலைமையிலான தொழிலாளர் முன்னேற்றப் பேரவையின் பொதுக்குழு கடும் எதிர்ப்புத் தெரிவித்துள்ளது.

இப்பொதுக் குழுக் கூட்டம் கடந்த 14-ந் தேதி மதுரையில் நடந்தது.

நீண்ட காலத்துக்குப் பின் இப்பொழுதுதான் தொழிலாளர் பெற்றுள்ள இந்த சம்பள விகிதத்தை, தற்காலிகமாக ஏற்பட்டுள்ள நெருக்கடிக்காக குறைக்க வேண்டும் என்பது நியாயமில்லை என்று அதன் பொதுச் செயலாளர் திரு காட்டூர் கோபால் தெரிவித்தார். 20 ஆண்டுகளில் அடையக் கூடிய லாபத்தை 1972—73ம் ஆண்டில் மட்டும் அடைந்தார்கள் முதலாளிகள். அப்போது அந்த லாபத்தை எந்தத் தொழிலாளர்களுக்கு வாரி வழங்கினர்கள்- லாபத்துக்கு ஏற்ப போனஸ் கூட தர மறுத்த முதலாளிகளுக்கு இப்போது சம்பளத்தைக் குறைத்துக் கொள்ளவேண்டும் என்று கோர உரிமை இல்லை என்ருர்.

எனவே,'சம்பளவெட்டை' எந்த ரூபத்திலும் முன்னேற்றப்பேரவை ஏற்றுக்கொள்ளாது என்றும் குறிப்பிட்டார்.

### "பெண் பீடித் தொழிலாளர் தினம்" பீடி தொழிலில் சமஊதியம் கோரி இந்திராகாந்திக்குதந்தி

வேலூர், டிச. 18—

ஆண் தொழிலாளர்களுக்கும் பெண்தொழிலாளர்களுக்கும், சம வேலைக்கு சம ஊதியம் என்பதை பீடித் தொழிலுக்கும் கொண்டு வர வேண்டும்என்று பாரதப்பிரதமர் இந்திரா காந்திக்கு தமிழ்நாடு பீடி—சுருட்டுத் தொழிலாளர் சம்மேளனப் பொதுச் செயலாளர் தோழர் வே. கண்ணன் கடந்த 15 ந் தேதி அனுப்பியுள்ள தந்தி ஒன்றில் வற்புறுத்தியுள்ளார்.

அகில இந்திய பீடி—சுருட்டுத் தொழிலாளர் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க, டிச. 15 ந் தேதி 'பெண் பீடித் தொழிலாளர் தினம்' நாடு முழுவதும் அனுஷ்டிக்கப் பட்டது, அதை யொட்டி எல்லாபீடித் தொழிலாளர் சங்கங்களும் பிரதமருக்கு தந்திகள் அனுப்பியுள்ளன.

### ஆசிரியருக்கு...

#### புதிய ரேசன் கார்டுக்கான அடையாளச் சீட்டு : கெடுபிடிகள் தளர்த்தப்படுமா?

ஐயா,

தற்போது பழைய குடும்பக்கார்டு [ரேஷன் கார்டு]களுக்குப் பதிலாக புதிய ரேசன் கார்டு வினியோகம் செய்வதற்கான ஆயத்த வேலைகள் மதுரை மாநகர் முழுவதும் நடந்து வருகிறது.

அரசு ஊழியர்கள் மூலமாக புதிய ரேசன் கார்டுக்கான அடையாளச் சீட்டு தரப்படுகிறது. அடையாள சீட்டுதருவதற்குமுன்பழைய குடும்பக்கார்டு, வாக்காளர் அட்டை, வீட்டுவரி ரசீது முதலியவற்றை-—குறிப்பாக வீட்டு வரி ரசீதைக் காட்டினுல்தான் தரப்படும் என்று கூறப்படுகிறதாம். வீட்டுவரி ரசீதுஇல்லாமல்அடையாள சீட்டு தரக்கூடாது என்பது கலெக்டரின் உத்தரவாம்.

பொன்மேனியைச் சேர்ந்த பெத்தானியாபுரம், பாத்திமா நகர் போன்ற புறநகர்ப் பகுதிகள் புதிதாக மாநகராட்சியுடன்இணைக்கப்பட்டவை. புதிதாக வீடுகள்—குடிசை வீடுகள் கட்டப்பட்டு ஏராளமான ஏழைகள் குடியேறி வருகிருர்கள்.

புதிய வீடுகளுக்கு வரி விதிக்காத நிலையில இப்பகுதி மக்கள் வீட்டுவரி ரசீதுக்கு என்ன செய்வார்கள்? எங்கே போவார்கள்? ஏழை தினக்கூலித் தொழிலாளர்கள் ஏராளமானேர் வாடகை வீடுகளில் இருக்கக் கூடியவர்கள் வீட்டு வரி ரசீதுக்கு எங்கே போவார்கள். வேலையைப் போட்டுவிட்டு ரேசன் கார்டைபெற கலெக்டர் அலுவலகம் வருவதும் மிக்க சிரமம்.

ஆகவே, சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இப்பிரச்னை குறித்து விசாரித்து புதிய கார்டுக்கான அடையாளச் சீட்டைப் பெற பழைய ரேஷன் கார்டையும் வாக்காளர் சீட்டையும் காண்பித்தால் போதுமானதென்றும் வீட்டுவரி ரசீது அவசியமில்லை என்றும் உத்தரவு பிறப்பித்து தாமதமில்லாமல் புதிய கார்டுக்கான சீட்டை ஏழை மக்கள் பெற ஆவன செய்யும்படி கேட்டுக்கொள்வதுடன் இதுவரை ரேசன் கார்டு கிடைக்கப்பெருதவர்கள் மீதும் ஆழ்ந்த கவனம் செலுத்தி அவர்களுக்கும் கார்டு கிடைக்கத தகக ஏற்பாடுகளை செய்யவும் வேண்டுகிறேன்.

இப்படிக்கு
கே ராமதாஸ்
பெத்தானியாபுரம்.

### மெக்காவுக்கு அருகே தீ விபத்து தொழுகைக்கு சென்ற 200பேர் பலி

பக்ரைன், டிச. 17—

மெக்காவுக்கு செல்லும் முஸ்லிம்கள் அமைத்துள்ள கூடாரநகர் ஒன்றில் கடந்த வெள்ளி (12ந் தேதி) யன்று ஏற்பட்ட தீ விபத்தில் சுமார் 200 பேர் உயிரிழந்தனர்.

மெக்காவிலிருந்து 10 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள மினு என்னும இடத்தில் பெட்ரோல் டாங்குகள் தீபற்றி எரிந்து வெடித்ததால்இந்த கூடாரங்களுக்குத் தீ பரவியது.

ஈத்-உல்-ஜுரா கொண்டாடுவதற்காக கூடியிருந்த போதே இந்த பரிதாபகரமான விபத்து ஏற்பட்டது.

#### 2 இந்தியருக்கு தீப்புண் காயம்

விபத்தினல் பல நூற்றுக்கணக்கானவர்கள் பயங்கரமான தீக்காயங்களுக்கு ஆளாயினர். இந்தியாவிலிருந்துசென்றிருந்தஹஜ் யாத்ரீகர்கள் இருவர் தீபுண் காயமடைந்தனர் என்றும், அதில் ஒருவருக்கு பலத்த காயமென்றும் அதிகாரப் பூர்வமான தகவல் ஒன்று குறிப்பிடுகிறது.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்கசிஸ்ட்] தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் [6/16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் எம் ஆர் வெங்கட்ராமன்

## மத்திய அரசாங்கம் பிறப்பித்த பத்திரிகை தணிக்கை உத்திரவு

### எந்தெந்த விஷயங்களுக்கு பொருந்தும்? பம்பாய் உயர்நீதி மன்றம் தீர்ப்பு

மத்திய அரசாங்கம் பிறப்பித்துள்ள பத்திரிகை தணிக்கை, 5 விஷயங்களில் தான் பொருந்தும்என்று பம்பாய் உயர்நீதி மன்றம் தீர்ப்புக் கூறியுள்ளது. நீதிமன்ற உத்திரவுகளை பிரசுரிக்க தடைவிதிக்கக் கூடாது என்றும் உத்திரவு பிறப்பித்துள்ளது. கடந்த நவம்பர் மாத மத்தியில் பிறப்பிக்கப்பட்ட இந்த உத்திரவுகள் பற்றிய விவரம் வருமாறு:—

கடந்த ஜூன் 26-ந் தேதியன்று மத்திய அரசாங்கம் பிறப்பித்த பத்திரிகை தணிக்கை உத்திரவை ஆட்சேபித்து பம்பாயிலிருந்து வெளியாகும் ஒரு பத்திரிகையின் ஆசிரியர் திரு ஒய். டி. லோகுகார் என்பவர் பம்பாய் உயர்நீதி மன்றத்தில் 'ரிட்' மனு ஒன்றைத் தாக்கல் செய்தார். இதில் இந்திய அரசாங்கமும், இந்திய அரசின் பிரதம பத்திரிக்கைத் தணிக்கை அதிகாரியான திரு எச். டி. டி. பென்ஹாவும் எதிர் மனுதாரர்களாகச் சேர்க்கப்பட்டிருந்தனர்.

இந்த மனுவை ஏற்றுக் கொண்ட நீதிபதி பட், ஜூன் 26-ந் தேதி இந்திய அரசாங்கம் பிறப்பித்த தணிக்கை உத்திரவு ஐந்து விஷயங்களுக்கு மட்டுமே பொருந்தும் என்று தீர்ப்புக் கூறினர்.

இந்தியாவின் தற்காப்பு, சிவில் தற்காப்பு,பொதுப்பாதுகாப்பு,பொதுவாழ்வில் அமைதியைக் காப்பாற்றுவது, இராணுவ நடவடிக்கைகளைத் திறம்பட நடத்துவது —ஆகிய இந்த ஐந்துவிஷயங்களை பற்றி மட்டும்தான் பத்திரிக்கை தணிக்கை பொருந்தும் என்றும்—

இந்த ஐந்து விஷயங்களுடன்சம்பந்தமில்லாத 'விஷயங்களைப் பற்றிய செய்திகளைப் பிரசுரிப்பதை ஆட்சேபிக்கும் அதிகாரம் கிடையாது என்றும் நீதிபதி பட் தனது தீர்ப்பில் கூறினர்.

இந்தத் தீர்ப்பு பற்றிய விவரங்களை 'டைம்ஸ் ஆப் இந்தியா' 'மகாராஷ்டிரா டைம்ஸ்'—ஆகிய பத்திரிகைகளுக்கு மனுதார் லோகுகார் அனுப்பினர். ஆனல், இந்த நீதிமன்றத் தீர்ப்பை பத்திரிகைகளில் பிரசுரிக்க 'மகாராஷ்ட்ரா மாநில அரசாங்கத்தின் விஷேச பத்திரிகை ஆலோசனை அதிகாரியான திரு விஞேதராவ் அனுமதிக்கவில்லை.

திரு விஞேதராவின்இந்த நடவடிக்கையையும் ஆட்சேபித்து திரு. லோகுகார் இரண்டாவது 'ரிட்' திருத்த மனுவைத் தாக்கல் செய்தார். இதில் மகாராஷ்டிரா அரசாங்கமும்விஷேசபத்திரிக்கை ஆலோசகரும் எதிர்மனுதாரர்களாக சேர்க்கப்பட்டிருந்தனர்.

இந்த மனுவை ஏற்றுக் கொண்ட ரெகே, தனது தீர்ப்பில் — இந்த மனுவை கோர்ட் ஏற்றுக்கொண்டது பற்றிய செய்திகளை பிரசுரிக்கலாகாது என எந்த உத்திரவையும் பிறப்பிக்கக் கூடாது என்றுஉத்திரவிட்டார். அத்துடன், பம்பாய் உயர்நீதி மன்றத்தினுல் பிறப்பிக்கப்பட்ட உத்திரவுகளைப் பிரசுரிப்பதற்கும் தடை விதிக்கக் கூடாது என்றும் உத்திரவு பிறப்பித்தார்.

இந்த மனு பற்றிய செய்திகளைப் பிரசுரிக்கக் கூடாது என்று பத்திரிகைகளுக்குப் பிறப்பிக்கப்பட்டுள்ள உத்திரவை வாபஸ்பெற வேண்டும் என்றும் நீதிபதி ரெகே தனது தீர்ப்பில் கூறியுள்ளார்.

### சேலத்தில் பொதுக்கூட்டம்

20—12—75 மாலையில்
அரிசிபாளையத்தில்
தோழர்கள்
மதுரை நன்மாறன்
வி ராமசாமி
பி கிருஷ்ணன்
பேசுவர்

### சிவகிரி சப்-தாலுகா: பஞ்சப்பிரதேசமென அறிவிக்க கோரிக்கை

வாசுதேவநல்லூர், டிச. 18 —

சிவகிரி சப்தாலுகாவை பஞ்சப் பிரதேசமென அறிவிதது வறட்சி நிவாரணப் பணிகளை மேற்கொள்ள வேண்டும என்று இங்கு நடந்தஅனைத்து வாலிபர்முன்னணிக்கிளைகளின் நிர்வாகிகள் கூட்டம் வற்புறுத்தியது.

இக்கோரிக்கையை விளக்கி மக்களின்ஆதரவை திரட்டும் பொருட்டு கிராமங்களுக்குச் சென்று சைக்கிள் பிரச்சாரம் செய்வதுஎன்றும் தீர்மானிக்கப்பட்டது.

கடந்த 13-ந்தேதி நடந்த இக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நெல்லை மாவட்ட வடக்குப் பிராந்தியக் கமிட்டிச் செயலாளர் தோழர் எம். பாண்டியன் கலந்து கொண்டு இன்றைய அரசியல் நிலைமையையும் இளைஞர் கடமையையும் விளக்கிப் பேசினர். மறைந்த தமிழக சி ஐ டி யூ துணைத் தலைவர் தோழர் எஸ். கிருஷ்ணமூர்த்திமறைவுக்கு கூட்ட துவக்கத்தில் அஞ்சலி செலுத்தப்பட்டது.

### மின் வாரியத்தில் மாநில ரீதியில் தி.மு.க. சங்கம்

மதுரை. டிச. 18—

தமிழ்நாடு மின்சார வாரியத்தில், மாநிலரீதியான சங்கம் ஒன்றை திமுக அமைத்துள்ளது.

இதன் தலைவராக நீலகண்டனும், செயலாளராக மதுரை ராசுவும், பொருளாளராக முகமது மைதீனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### ராசிபுரம் இந்திரா காங்கிரஸ் கமிட்டி கலைப்பு

சேலம், டிச. 18 —

சேலம் மாவட்டம் ராசிபுரத்தில்,இந்திரா காங்கிரஸ் கமிட்டி கலைக்கப்பட்டதாக, அக்கட்சியின் மாவட்டத் தலைவர் கே. எஸ். அர்த்தநாரீஸ்வரக்கவுண்டர் அறிவித்துள்ளார். பதிலாக புதிய அட்ஹாக் கமிட்டி அமைத்துள்ளாராம்.

கோஷ்டித்தகராறேஇந்த கலைப்பு நடவடிக்கைக்குக் காரணம் என்று கூறப்படுகிறது.

### போனஸ்குறைப்பு-லே ஆப்-கதவடைப்பு ஆட்குறைப்பு-சம்பளவெட்டை எதிர்த்து

### தஞ்சை மாவட்ட மாநாடு

21—12—75-ந் தேதி ஞாயிறு காலை 9 மணிக்கு
கும்பகோணத்தில்
மூர்த்தி கலை அரங்கில் துவங்கும்
சி ஐ டி யூ துணைத் தலைவர்
ஏ. பாலசுப்ரமண்யம்
காட்டூர் கோபால் (தொழிலாளர் முன்னேற்றப் பேரவை)
பி. எஸ். சின்னத்துரை (ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம்)
ஏ. மலராமன் (காங்கிரஸ் தொழிற் சங்கம்)
என். வெங்கடாசலம் [பஞ்சாலை தொழிலாளர் சங்கம்)
மற்றும் பலர் பேசுவர்.
மாலை 6 மணிக்கு சாரங்கபாணி சன்னதியில்
பொதுக்கூட்டம் நடைபெறும்.

### ரூ.1500 கோடிக்கு 10 விமானங்கள் மரண வியாபாரி அமெரிக்கா ஈரான் தலையில் திணிக்கிறது

நியூயார்க், டிச. 18—

ராடார் வசதிகளுடன் கூடிய மிகவும் நவீன கண்காணிப்பு விமானங்களை ஈரான் நாட்டுக்கு மரண வியாபாரியான அமெரிக்கா விற்பனை செய்யவிருக்கிறது. சாதாரணமான "போயிங் 707" போக்குவரத்து விமானமான இதில்—விமானச் சண்டைக்கான நவீன ராடார் மற்றும் செய்தித் தொடர்பு வசதிகள் உள்ளன.

ஒன்றின் விலை 18 கோடியே 70 இலட்சம் டாலர் அதாவது சுமார்150 கோடி ரூபாய் வீதம் 10 விமானங்களை விற்கத் தயாராம்.

இந்த விமானம் ஒன்று உற்பத்தி செய்ய 94 கோடியே 49 இலட்சம் ரூபாய்தான் ஆகிறதாம். ஆனல் ஈரானிடம் கூடுதலாக விற்கப்படுகிறது, ஏனெனில, பயிற்சி அளிக்கவும் மற்ற உதவிகளுக்காகவும் தான் கூடுதல்விலை நிர்ணயிக்கப்பட்டுள்ளதாம். அது தவிரஇந்த விமானத்தை உற்பத்தி செய்வதற்காக நடந்த ஆராய்ச்சிப்பணிகளுக்கான செலவுகளைச் சரிக்கட்ட ஒவ்வொரு விமானத்தின் விற்பனை விலையிலும் 16 கோடி ரூபாயை ஒதுக்குவது என்று இராணுவ இலாகா முடிவு செய்துள்ளதாம்.

ஆக இதெல்லாம் சேர்த்து 150 கோடி ரூபாய்க்கு ஒரு விமானம் என்ற விகிதத்தில் 10 விமானங்களை ஈரான் தலையில் திணிக்கிறது, மரண வியாபாரியான அமெரிக்க ஏகாதிபத்தியம்,

அதே சமயத்தில் அமெரிக்க இராணுவக் கூட்டான 'நேட்டோ'வில் உறுப்பினர்களாக உள்ள நாடுகளுக்கு மட்டும் ஒரு விமானத்தின் விலை—6 கோடிடாலர்—48 கோடி ரூபாய்தானும். ஆனல் அந்த விலையில்விற்க முன் வந்தபோதிலும், இந்த விமானங்களை வாங்க நேட்டோநாடுகள் எதுவும் முன்வரவில்லை.